# தமிழ்ப் புலவர் பெருமக்கள்

## II



*ஆசிரியர் :*
**புலவர் மா. இராசமாணிக்கம்,**
B.O.L., L.T., M.O.L.,
*தமிழ் விரிவுரையாளர்,*
*விவேகானந்தர் கல்லூரி, சென்னை.*

விந்தியா பப்ளிகேஷன்ஸ்
வேப்பேரி    சென்னை

# முகவுரை

தமிழ்ப் புலவர் பெருமக்கள் என்னும் பெயருடன் வெளிவரும் இத்துணைப்பாட நூல் வரிசை, முதல் மூன்று படிவங்கட்கு (Forms) உரியது. அவ்வரிசையில் இரண்டாம் நூலாக வெளிவரும் இதன் கண் **டாக்டர் உ. வே. சாமிநாதையர், சதாவதானி—செய்குதம்பிப் பாவலர், மறைமலையடிகள்** என்னும் மூவர் வரலாறுகள் இடம் பெற்றுள்ளன. பத்தொன்பதாம், இருபதாம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த இப் புலவர் பெருமக்கள் வரலாறுகளிலிருந்து அக்காலப் புலவர்கள் பாடம் படித்த முறை, பாடஞ் சொன்ன முறை, வருவாய் பெற்ற முறை, வாழ்க்கை நடத்திய முறை, அவர்களுடைய பெரும்புலமை, நல்லொழுக்கம், அவர்களை ஆதரித்த பெருமக்களைப் பற்றிய செய்திகள் முதலியவற்றை இக்காலத்தார் நன்கறியலாம். இப்பெருமக்கள் வரலாறுகள் தமிழ் மாணவர் படித்துணரத் தக்கனவாகும்.

உழைப்பால் உயர்ந்த டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள், மறைமலையடிகள் வரலாறுகள் பிள்ளைகட்கு ஊக்கத்தை அளிக்கும். பாவலர் வரலாறும் தமிழ்த் தொண்டில் ஆர்வத்தை ஊட்ட வல்லது. இவர் போன்ற புலவர் பெருமக்கள் வரலாறுகள் தமிழ் இளைஞர் வாழ்க்கையைச் செப்பம் செய்ய வல்லன.

**ஆசிரியன்**

# பொருளடக்கம்

# தமிழ்ப் புலவர் பெருமக்கள்

# II

## I. டாக்டர் உ. வே. சாமிநாதையர்
## (1855—1942)

### 1. இளமைப் பருவம்

**தமிழின் சிறப்பு**

மொழியின் வளர்ச்சிக்கெனப் பணி புரிவதே முதன்மையான நாட்டுத் தொண்டாகும். மொழியின் சிறப்பே நாட்டின் பெருமையை விளக்க வல்லது. மொழிச் சிறப்பு அதன் இலக்கியங்களைப் பொறுத்தது. இலக்கியங்கள் நிறையப்பெற்றுள்ள மொழியும், அம்மொழியினைக் கொண்ட-நாடும் பெருமைக்குரியவை ஆகும்.

செந்தமிழ் மொழி இலக்கியத் தேனிலே ஊறியது; இனிமை விருந்தளிப்பது; 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்' என்பதை உணர்த்துவது; 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்று ஓதுவது; 'பிறப்பொக்கும் எவ்வுயிர்க்கும்' என்று

இசைப்பது. தமிழ், இன்பத் தமிழ்; பாவின் சுவைக் கடல்.

**நாட்டின் இழிநிலை**

'ஊனிலே எம்முயிர் உள்ளளவும் நிதம் ஓதி உணர்ந்து இன்புறுவோமே....தமிழ் நூலின் நன்னயம் முற்றும் தெளிவோமே' என்னும் உணர்ச்சி அக்காலத் தமிழனிடத்தில் மிகுந்திருந்தது. ஆனால் இடைக் காலத்தில் தமிழ் நாடு வேற்று நாட்டவரின் ஆட்சிக்கு உட்பட நேர்ட்டது; தமிழன் தன உணர்ச்சியை இழந்தான்; மொழிப்பற்று அற்றான்; நாட்டுப்பற்றைத் துறந்தான். இதன் பயனாகத் தமிழ் இலக்கியங்கள் அழிந்தன; ஆடிப் பதினெட்டாம் பெருக்கில் பல நூல்கள் ஆற்றோடு போயின.

**நூல் வறுமை**

பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் படிக்க விரும்பியவர்களுக்குத் தமிழ் நூல்கள் கிடைப்பது முயற்கொம்பாயிற்று. தமிழில் இன்னின்ன நூல்கள் இருக்கின்றன என்பதைக் கூடத் தமிழர்கள் அறிய முடியாமற் போயிற்று. தமிழ் படிக்க நாடுவோர் அவ்விடைக் காலத்தில் தக்க ஆசிரியர்களை, அதாவது, தமிழ் ஏடுகளைச் சேகரித்து வைத்திருந்தவர்களைத் தேடிக் கண்டுபிடித்துப் படிக்கவேண்டிய துன்பநிலை ஏற்பட்டது. படிக்கும்போது ஒவ்வொரு நூலையும் ஆசிரியரின் ஏட்டிலிருந்து மாணவர்கள் புதிய பனை ஏடுகளில் பதிவு செய்துகொள்ள வேண்டும். இதனால் தமிழ்க் கல்வி பயிலுவதென்பது பலருக்கு அரிய செயலாயிருந்தது.

### நூல் வெளியீட்டு முயற்சி

இங்ஙனம் அரிய நூல்கள் அழிந்து போய்க் கொண்டிருப்பதையும், தமிழ் கற்க விரும்புவோர் தக்க நூல்கள் கிடைக்காமல் ஊர் ஊராக அலைந்து தேடவேண்டி ஏற்படுவதையும் உணர்ந்தவர் பலர். இத்துன்ப நிலை யறிந்து வருந்தி, அழிந்து போகவிடாமல் எஞ்சியுள்ள நூல்களையேனும் திரட்ட வேண்டும் என்று உழைத்தோர் சிலர்; அவ்வாறு திரட்டியவைகளை அச்சிற் பதிப்பித்து வெளியிட முயன்றோர் மிகச் சிலர்.

### டாக்டர் உ. வே. சாமிநாதையர்

இவ்வண்ணம் கிடைக்கும் நூல்களைத் திரட்டி, அவற்றை அச்சிற் பதிப்பிக்கும் பணியினையும் மேற்கொண்டு உழைத்தவருள் டாக்டர் உ. வே. சாமிநாதையர் சிறந்தவர் ஆவர்.

### உத்தமதானபுரம்

'சோழநாடு சோறுடைத்து' என இலக்கியப் புகழ் பெற்றது தஞ்சை மாவட்டம். இன்றும் தென் இந்தியாவின் நெற்களஞ்சியம் என இம்மாவட்டம் சிறப்புப் பெற்றுள்ளது. இம்மாவட்டத்திலே, காவிரி யும், அதன் கிளையாறுகளாகிய அரிசிலாறு, குடமுருட்டி, திருமலைராயன், வீரசோழனாறு முதலிய வைகளும் பாய்ந்து வளம் பெறச் செய்துள்ள நிலப் பகுதி பாபநாச வட்டாரமாகும். இவ்வட்டாரத்தில் உள்ள **உத்தமதானபுரம்** என்னும் சிற்றூரே டாக்டர் உ. வே. சாமிநாதையர் பிறந்த ஊராகும்.

உத்தமதானபுரத்தில் 'இவ்வளவு ரூபாய் உடையவர்' என்று கணக்கிட்டுச் சொல்லும் சொத்து உடையவர் ஒருவரும் இல்லை. ஆனால் அவ்வூரில் நீரும் நிழலும் விளைநிலங்களும் நிறைந்திருந்தன; சான்றோர் நிறைந்திருந்தனர்; இசைப் புலவர்களும் மொழிப் புலவர்களுமாகச் சிலர் இருந்தனர்; அமைதியும் மனநிறைவும் அவ்வூர் மக்களிடத்து நிறைந்திருந்தன.

## ஐயரின் பெற்றோர்

உத்தமதானபுரத்தில் வாழ்ந்தவர்களுள் **வேங்கட சுப்பையர்** என்பார் ஒருவராவார். அவர் இசையிலும் தமிழ் மொழியிலும் புலவராக விளங்கினர்; சமயப்பற்று மிகுந்தவராக இருந்தார்; உடையார் பாளையம், அரியிலூர் ஆகிய இடங்களின் குறுநில மன்னர்களுடைய அரண்மனைகளில் இசைப் புலவராக இருந்தார்; தம்மை நாடிவந்த மாணவர் பலருக்கு இசையினையும் தமிழ் மொழியினையும் கற்பித்துவந்தார்.

இசை கற்பிப்பது, புராணப்பிரசங்கங்கள் செய்வது போன்றவற்றின் மூலம் கிடைக்கும் சிறிதளவு வருவாயில் அவர் குடும்பம் நடந்துவந்தது. அவருடைய நற்பண்புகளுக்கும் தூய மனத்திற்கும் ஏற்றவாறு இல்லக்கிழத்தியார் அமைந்தார். **சரசுவதி** என்னும் பெயர் பூண்ட அவ்வம்மையார்,

> "மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்
> வளத்தக்காள் வாழ்க்கைத் துணை"

என்னுமாறு, மனையறத்திற்குத் தக்க நற்குண நற்

செய்கைகள் உடையவராய்த் தம் கணவரின் வருவாய்க்குத் தக்கவாறு செலவு செய்பவராய் நடந்து கொண்டார்.

## ஐயரது பிறப்பு

ஒத்த கருத்தும், ஒத்த பண்பும், ஒத்த நலனும் வாய்ந்தவர்களாய் விளங்கிய வேங்கடசுப்பையரும் சரசுவதி அம்மையாரும் ஓருயிரும் ஈருடலுமாக விளங்கினர். எனினும், குழந்தை பிறக்கவில்லை என்னும் கவலை நீண்ட காலம் வரை அவர்கள் மனத்தை வருத்திவந்தது. இக்கவலையைப் போக்க வந்தது போல, 1855-ஆம் ஆண்டு, பிப்ரவரித் திங்கள், 19-ஆம் நாள் இவர்களுக்கு ஓர் ஆண் மகவு பிறந்தது.

பிள்ளைக்கலி தீர்க்க வந்த அக்குழந்தையைப் பெற்றோர் சீராட்டிப் பாராட்டி வளர்த்தனர்; குழந்தைக்கு **வேங்கடராமன்** என்னும் பெயரிட்டு மகிழ்ந்தனர். அப்பெயர் தம் மாமனாரின் பெயராக இருப்பதால் **சாமிநாதன்** என்னும் பெயரால் குழந்தையைத் தாயார் அழைத்துவந்தார். தாயார் இட்டு அழைத்த பெயரே குழந்தைக்கு இறுதிவரை நிலைத்து விட்டது.

## அக்காலப் பள்ளிப் படிப்பு

சாமிநாத ஐயர், அருமைக் குழந்தையாக வளர்ந்து, குறுநடை நடந்து, குதலைமொழி பேசிப் பெற்றோரை மகிழ்வித்தார்; பின் ஐந்தாண்டு அடைந்தவுடன், திண்ணைப் பள்ளிக்கூடம் ஒன்றில் சேர்க்கப்

பட்டார். முதன் முதலில் வேங்கட சுப்பையரே தம் புதல்வருக்கு நிகண்டுகள், சதகம், இசை முதலிய வற்றைக் கற்பித்து மனப்பாடம் செய்துவைத்தார். பிறகு ஐயரவர்கள் திண்ணைப் பள்ளியில் தொடக்கக் கல்வியை நன்கு பயின்றார்.

அக்காலத் திண்ணைப்பள்ளிக்கூடப் படிப்பு இக் காலப் பள்ளிப் படிப்புப் போன்றதன்று; பிள்ளைகள் வைகறையில் விழித்தெழுந்து பள்ளிக்குச் சுவடித் தூக்குகளுடன் செல்லுதல் வேண்டும். பனைஓலை ஏடுகள் பலவற்றை ஒரு மரப்பலகைமீது அடுக்கி வைத்துக் கட்டி, அப்பலகையைக் கயிறு கோத்துத் தூக்கிச் செல்வதற்குச் **சுவடித் தூக்கு** என்பது பெயர்.

மாணவர்கள் பள்ளி சென்றதும், சுவடித் தூக்கை ஓரிடத்தில் மாட்டிவைப்பர்; பிறகு முதல் நாள் நடந்த பாடங்களை முறையாக இருந்து மனப் பாடமாக ஒப்புவிப்பர். இதற்கு 'முறை சொல்லுதல்' என்பது பெயராகும். ஆசிரியர் வீட்டிற்குள் இருந்த படியே மாணவர்கள் கூறுபவைகளைக் கவனித்துக் கொண்டிருப்பார்.

முறை சொல்லுதல் முடிந்ததும், பிள்ளைகள் ஏரி, வாய்க்கால், குளம் முதலிய இடங்களுக்குச் சென்று காலைக் கடன்களை முடித்துக்கொள்வர்; தத்தம் ஆடைகளில் புதிய மணலை எடுத்துக்கொண்டு பள்ளி திரும்புவர்; பள்ளி சேர்ந்ததும், பழைய மணலை அகற்றிவிட்டுப் புதிய மணலைப் பரப்புவர்; எழுதிப்

பழக வேண்டிய பிள்ளைகள் அதில் எழுதுவர்; பிற பிள்ளைகள் தத்தம் பாடங்களைப் படிப்பர்.

ஒன்பது மணிக்குப் பிள்ளைகள் காலை உணவுக்கு அனுப்பப்படுவர்; மீண்டு வந்ததும், பன்னிரண்டு மணிவரை படித்துவிட்டுப் பகல்உணவுக்குச் செல்வர்; மீண்டும் பள்ளிக்கூடம் பிற்பகல் மூன்று மணிக்குத் தொடங்கி, இரவு ஏழுமணிவரை நடைபெறும். அன்றாடம், பிள்ளைகள் பாடத்தை முடித்துக்கொண்டு வீடு திரும்புகையில், மண், பறவை, ஊர், விலங்கு இவற்றின் பெயர்களில் வகைக்கு ஒன்றை ஆசிரியர் சொல்லி அனுப்புவார். பிள்ளைகள் மறுநாள் பள்ளிக்கு வரும்போது இப்பெயர்களை மறவாமல் கூறவேண்டும். பிள்ளைகளின் நினைவாற்றலைப் பெருக்க, அக்கால ஆசிரியர்களால் இம்முறை கையாளப்பட்டது போலும்!

இப்பள்ளிகளில் திறமையும் உடலுரமும் உடையவன் சட்டாம்பிள்ளையாக இருப்பான். ஆசிரியர் இல்லாத காலங்களில் சட்டாம்பிள்ளை சர்வாதிகாரியாக இருப்பது வழக்கம். பழைய மாணவர்கள் புதிதாக வந்து சேரும் மாணவர்களுக்குப் பாடம் கற்பிப்பதும் உண்டு.

அக்கால மாணவர்கள் மணலைக் கற்பலகையாகவும், பனை ஓலையைக் காகிதமாகவும், எழுத்தாணியைப் பேனாவாகவும் கொண்டனர். அக்கால மாணவர் முதலில் எழுதப்பழகுவது மணலில்தான். ஆசிரியர் முதலில் எழுதிக் காட்ட, அவ்வெழுத்துக்

களை மாணவர்கள் வாயால் உரத்துச் சொல்லிக் கொண்டே விரலால் மணலில் எழுதுவார்கள்; பிறகு பனை ஓலையை வாரி, ஒழுங்காக நறுக்கித் துளை யிட்டுக் கோக்கக் கற்பிக்கப்படுவர்; அதற்குப் பிறகு எழுத்தாணி பிடித்து எழுதக் கற்பிக்கப்படுவர். எழுதத் தெரிந்தபின், சுவடியிலுள்ள எழுத்துக்கள் தெளிவாகத் தெரிவதற்காக மை பூசும் விதத்தையும் மை கூட்டும் விதத்தையும் மாணவர் அறிந்துகொள் வர். சுவடிகளில் மை பூசுவதற்கு 'மையாடல் விழா' என்பது பெயராகும். இத்தகைய பள்ளிகளில் பிள்ளைகள் ஐந்தாம் வயதில் சேர்க்கப்படுவர்; முத லில் ஆசிரியர் நெடுங்கணக்குக் கற்பிப்பார். எழுத் துக்கள் வந்த பிறகு, ஒவ்வொன்றாகச் சுவடி துவக்கப் படும். இதற்குச் 'சுவடி துவக்கல்' என்பது பெயர்.

## ஐயர் பலரிடம் பாடங் கேட்டல்

இவ்வண்ணம் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் படிப்பை முடித்துக்கொண்ட சாமிநாத ஐயர், அரிய லூர்ச் **சடகோப ஐயங்காரிடம்** தமிழ் பயிலத் தொடங்கினர். ஐயங்கார் வேங்கட சுப்பையரின் நண்பர். வேங்கட சுப்பையரின் பாட்டுக்கு ஐயங்கார் வீணை வாசிப்பார். இருவரும் அடிக்கடி இசைபற்றிய ஆராய்ச்சிகளைச் செய்துகொண்டிருப்பர். சட கோபர் நன்றாகத் தமிழ் பயின்றவர். ஆகலின், அவ ரிடம் மாணவர் பலர் சேர்ந்து பாடங்கேட்டனர். சாமிநாதையர் அவரிடம் திருவரங்கத்து அந்தாதி, திருவேங்கட மாலை, திருவேங்கடத்து அந்தாதி முதலிய நூல்களைப் பாடங்கேட்டார்.

பிறகு சாமிநாதையர் மற்றும் சில புலவர்களிடமும், செங்கணம் **விருத்தாசலரெட்டியா**ரிடமும் பல நூல்களைப் பாடங்கேட்டார்; **கிருஷ்ண உபாத்தியாயர்** என்பாரிடம் தெலுங்கு மொழி பயின்றார்; இடையிடையே தம் தந்தையாரிடம் இசை பயின்று இனிமையாகப் பாடக் கற்றார்.

சாமிநாதையர் இவ்வளவுடன் திருப்தி கொள்ளவில்லை; மேலும் பல தமிழ் நூல்களைக் கற்க விரும்பினார். அக்காலத்தில் புலவர்களுள் மிகச் சிலர் தவிர, மற்றையோர் எல்லா நூல்களையும் படித்தவர்களாக இல்லை; நூல்கள் கிடைக்கவுமில்லை. எனவே, தக்கார் ஒருவரைத் தேடிக்கற்றல் வேண்டும் என்னும் அவா ஐயர் மனத்தில் எழுந்தது. தம் தந்தையாரைப் போலஇசைப்புலவர் ஆகுமாறுசிலர் அவரைத்தூண்டினர்; ஆனால் அவர் அதற்கிசையவில்லை. ஐயருக்கு அதுவரை பாடஞ்சொல்லிய ஆசிரியர்கள் **மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களிடம்** பயின்றால் எல்லா நூல்களையும் பாடங்கேட்க முடியும் என்று கூறினர். பிள்ளையவர்களைப் பற்றி முன்னரே கேள்வியுற்றிருந்த ஐயரும், அம் மகா வித்துவானை அடையும் நாளை ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்.

## 2. பிள்ளையவர்கள் மாணவர்

### மாணவராகச் சேர்தல்

சாமிநாதையர் தமது பதினேழாம் வயதில் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடம் வந்து சேர்ந்தார். வேங்கட சுப்பையர் தம் புதல்வரை அழைத்துச் சென்று பிள்ளையவர்களிடம் அடைக்கலப்படுத்திவிட்டார். பிள்ளையவர்கள் அவ்வமயம் திருவாவடுதுறை மடத்தின் ஆதீன வித்துவானாகவும் அம்மடத்தின் தலைவராகிய மேலகரம் சுப்பிரமணிய தேசிகரின் உயிர்த் தோழராகவும் விளங்கினார்; மயிலாடுதுறையில் (மாயூரத்தில்) நிலையாக வாழ்ந்தார். அவர் ஐயரவர்களின் அறிவுக் கூர்மையையும் அடக்கத்தையும் கண்டு மகிழ்ச்சியோடு அவரைத் தம் மாணவராக ஏற்றுக்கொண்டார். இதனால் ஐயரவர்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையில்லை.

### குருகுல வாழ்க்கை

ஐயர் பிள்ளையவர்களை நிழல்போலத் தொடர்ந்து வந்தார்; ஆசிரியர்க்கு வேண்டும் பணிகளை முட்டின்றிச் செய்தார்; ஆசிரியர் கூறும் செய்யுள்களைப் பனை ஏட்டில் எழுதினார்; ஆசிரியர் ஓய்வு கண்டு, அவரிடம் பாடம் கேட்டுப் பல நூல்களைப் பயின்றார்; இலக்கியங்கள் பலவற்றைக் கற்றார்; இலக்கணங்களை ஐயந்திரிபற அறிந்தார்; செய்யுள் இயற்றும் திறன் பெற்றார்; பனை ஓலை ஏடுகளைத் திறமையாகப் படிக்கவும் எழுதவும் கற்றார். அவர் இவ்வாறு ஆறு ஆண்டுக்காலம் பிள்ளையவர்களுடன்

இருந்து, அரிய கலைச் செல்வத்தைத் திரட்டினார். கலை வள்ளலாக விளங்கிய பிள்ளையவர்கள் 'இல்லை' என்னாமல் கலைச்செல்வத்தை அள்ளி யள்ளி வழங்கினார்; அவரை அணுகிப் படித்தவர்கள் தத்தம்மால் வாரிக்கொண்டு செல்லும் அளவு கலைச் செல்வத்தைப் பெற்றுக்கொண்டனர். ஐயரவர்கள் தம்முடைய கலைப்பசி அடங்கும் வரை கலைச் செல்வத்தை அள்ளிக்கொண்டார்.

## இசைப் பயிற்சி

ஐயர் பிள்ளையவர்களிடம் பாடம் கேட்டுவந்த போது, அதே ஊரில் இருந்த **கோபால கிருஷ்ண பாரதியாரிடம்** இசை பயின்றார். ஆனால் இசை பயில்வது தமிழ்க்கல்வியை ஆழ்ந்து பயில ஒட்டாமற் செய்துவிடுமெனப் பிள்ளையவர்கள் கூறவே, ஐயர் அதைக் கைவிட்டார்.

## பெயர் : சாமிநாதன்

ஐயரது இயற் பெயராகிய 'வேங்கடராமன்' என்பதை மாற்றியதும் பிள்ளையவர்களே ஆவார். அவர் ஐயருக்குச் 'சாமிநாதன்' என்றொரு பெயர் இருப்பதை முதலில் அறியார். அவர் ஒரு நாள் ஐயரைப் பார்த்து, "உம் வீட்டார் உம்மை அழைப்பது இப்பெயர் கொண்டா?" எனக் கேட்டார். ஐயர், "வேங்கடராமன் என்பது என் மூதாதையர் பெயராதலின், 'சாமிநாதன்' என்னும் பெயரால்தான் வீட்டார் அழைப்பர். சாமிநாதன் சாமா எனத் திரிந்து, வீட்டில் அழைக்கும் பெயர் 'சாமா' என்றாயிற்று," என்று கூறினார். உடனே

பிள்ளையவர்கள்; "சாமிநாதன் என்னும் பெயரே நன்றாயிருக்கிறது; இனி அப்பெயர் கொண்டே அழைப்பேன்," என்று கூறி, அன்று முதல் அப்பெயரிட்டே அழைத்துவந்தார். அவர் விரும்பிய வாறு அப்பெயரே இறுதிவரை ஐயருக்கு நிலைத்து விட்டது.

## ஆசிரியர் செய்த உதவி

ஐயர் பிள்ளையவர்களிடம் நெருங்கிப் பழகி அவர் மனம் மகிழும்வண்ணம் நடந்துவந்தனர். ஆதலால் அவர், தம்மை நாடி வந்த செல்வர்கள் பலரிடம் ஐயரை அறிமுகப்படுத்திவைத்தார்; தாம் திருவாவடுதுறை மடத்திற்குச் சென்ற போதெல்லாம் ஐயரையும் உடனழைத்துச் சென்று மடத்திலுள்ள தம்பிரான்களுடன் நெருங்கிப் பழகச் செய்தார்; மடத்துத் தலைவரவர்களிடம் ஐயரை அறிமுகப் படுத்தி, அவர் தம் அன்புக்கு இலக்காக்கினர்; தம்முடைய மாணவர்களுட் சிறந்தவரான தியாகராச செட்டியாருடன் ஆழ்ந்த நட்புக்கொள்ளச் செய்தார்.

## ஆசிரியர் அன்பு

பிள்ளையவர்களின் மாணவராகிய தியாகராச செட்டியார், கும்பகோணம் கல்லூரியில் தமிழாசிரிய ராக இருந்தார். தம் தந்தையாருக்கு உதவியாக இருந்து, பொருளீட்டித் தம் குடும்பத்துக்கு உதவினால் நலமாக இருக்கும் என்பதை அறிந்த ஐயர், செட்டியாரிடம் தம் எண்ணத்தைக் கூறினர். செட்டியாரும் உடனடியாக ஒரு தமிழாசிரியர் வேலை பார்த்து, அதனை ஏற்றுக்கொள்ளுமாறு ஐயரிடம்

கூறினர். ஆனல் பிள்ளையவர்கள் 'அது வேண்டா வென்று கூறி, மேலும் சிறிது காலம் தம்மிடம் பயிலு மாறு ஐயருக்குக் கட்டளையிட்டார். அதை மீற முடியாத ஐயர், தம் தந்தையார் விருப்பத்திற்கு இணங்க, இடையிடையே தம்மூர் சென்று, சுற்றுப் புறங்களில் புராணப் பிரசங்கங்கள் செய்து, அவற்றிற் கிடைத்தவற்றைத் தந்தையாருக்கு உதவிவந்தார்.

### கல்லூரி ஆசிரியர்

இத்தறுவாயில் மீனட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் காலமானர்; ஐயரவர்கள் மிக வருந்தித் திருவாவடு துறை மடத்துத் தலைவரிடம் போய்ச் சேர்ந்தார்; மடத்துத் தலைவரிடம் சில நூல்களைப் பயின்றார்; மடத்துப் பிள்ளைகளுக்குப் பாடம் சொன்னர். இவ் வாறு பயின்றும் பயில்வித்தும் காலங்கழித்துக் கொண்டு இருக்கையில், கும்பகோணம் கல்லூரியில் இருந்து விலக முடிவு செய்த தியாகராச செட்டியார், தம் பதவியில் ஐயரை அமர்த்தினர். இப்பதவியில் அமர்வதற்கு என்று மடத்துத் தலைவர் ஐயருக்களித்த நற்சாட்சிக் கடிதத்தில், பிள்ளையவர்களிடம் ஆறாண் டுக் காலமும், தம்மிடம் நான்காண்டுக்காலமும் ஐயர் படித்திருப்பதாகக் குறிப்பிட்டிருந்தார்.

ஐயர், பதவிக்காகக் கல்லூரி சென்ற போது, கல்லூரித் தலைவர், ஒரு செய்யுள் செய்யுமாறு பணித்தார். உடனே ஐயர் ஓர் அழகிய செய்யுளைப் புனைந்து கொடுத்தார். அச்செய்யுளின் பொருட் செறிவையும் சொல் நயங்களையும் கண்ட அத்தலைவர், உடனே தமிழாசிரியர் பதவியில் ஐயரை அமர்த்தினர்.

# 3. ஆசிரியர் பதவியும் நூல்கள் வெளியீடும்

## 'மகாவித்துவான்' பட்டம்

ஐயரது புலமைத் திறனையும் அவர் செய்யுட்கள் பலவற்றை இயற்றியுள்ளதையும் அறிந்த திருவாவடுதுறை மடத்துத் தலைவர், அவருக்கு 'மகாவித்துவான்' என்னும் பட்டம் அளித்துச் சிறப்பித்தார்.

## தமிழ் ஆசிரியர்

ஐயர் கல்லூரியில் பதவி ஏற்ற பிறகு, மாணவர்களுடைய அன்பை மிக விரைவில் பெற்றார். அவர்கள் மிக விரும்பிக் கற்றுவந்த இலக்கண இலக்கியங்களை அவர்களுடைய மனமறிந்து கற்பித்துவந்தமையால், ஐயரிடம் மாணவர்களுக்கு மிகுந்த அன்பு ஏற்பட்டது. கல்லூரியில் மட்டுமன்றி ஐயர் வீட்டிலும் வந்து பலர் பல நூல்களைப் பாடங்கேட்கத் தொடங்கினர்.

அச்சமயத்தில்தான் ஐயரவர்களுக்கு முதற் குழந்தையாக ஓர் ஆண்மகவு பிறந்தது. ஐயர் ஒரு குழந்தைக்குத் தந்தையாகியும் குடும்பப் பொறுப்பை மட்டும் ஏற்றுக்கொள்ளவில்லை. அந்தக் கவலை தம் மைந்தருக்குக் கூடாதென்று கருதிய வேங்கட சுப்பையர் குடும்பப் பொறுப்பு முழுவதையும் தாமே ஏற்றுக்கொண்டார். ஐயர் வீட்டுக் கவலை எதுவு மின்றித் தமிழ் நூல்களைப் படிப்பதும், கேட்க வருபவர்களுக்குப் பாடஞ் சொல்வதும், கல்லூரி

மாணவர்களுக்கு நல்ல முறையில் கல்வி கற்பிப்பது மாகக் காலங் கழித்துவந்தார்.

## சிந்தாமணிப் பதிப்பு

ஐயரவர்களின் திறமையைக் கேள்விப்பட்டு, அவருடன் பழகி நட்புப் பூண்டவர்களுள் கும்பகோணம் முன்சீபாகிய **சேலம் இராமசாமி முதலியார்** குறிப்பிடத் தக்கவராவர். அவர் தம்மிடமிருந்த சீவக சிந்தாமணிப் பிரதி ஒன்றைக் கொடுத்துப் பாடம் கேட்க விரும்பினார். அதில் பிழைகள் மலிந்திருந்ததை ஐயர் எடுத்துக்காட்டவே, பிழையின்றி அதைப் பதிப்பிக்கத் தாம் பொருளுதவி செய்வதாக அவர் உறுதி கூறினார். ஐயர் அதற்கிசைந்து, சீவக சிந்தாமணியின் பிரதிகளைத் தேடும் பணியில் ஈடுபட்டார்; ஊர் ஊராக அலைந்து திரிந்து, பல பிரதிகளைக் கண்டுபிடித்து, ஒப்பு நோக்கி, பிழையறத் திருத்தி, 1887-ஆம் ஆண்டில் அதை வெளியிட்டார். அதன் மூலம் ஐயரின் பெயரும் புகழும் தமிழகத்தில் பரவின.

## பூண்டி-அரங்கநாத முதலியார்

பூண்டி அரங்கநாத முதலியார் எம். ஏ. அவர்கள் சென்னை மாகாணக் கல்லூரியில் ஆங்கிலப் பேராசிரியர்; ஆங்கிலத்திலும் தமிழிலும் சிறந்த புலமை பெற்றவர்; கச்சிக் கலம்பகம் என்னும் தமிழ்ச்செய்யுள் நூல் இயற்றியவர்; தமிழ் அறிஞர்களிடம் மட்டற்ற அன்புடையவர். கும்பகோணத்தில் சிந்தாமணி முதலிய நூல்களை ஆராய்ந்து அச்சிடும் பணியில் இறங்கிய ஐயரைப்பற்றி அவர் கேள்வியுற்றார்;

ஐயருடன் நேரிற்பழகி அளவளாவ அவாக் கொண்டார்; ஐயர் போன்ற அறிஞர்கள் சென்னையிலிருப்பதால் இன்னும் நல்ல தொண்டாற்ற முடியும் என எண்ணினார்; தம் கல்லூரியில் வேலை வாங்கித் தருவதாக ஐயரைச் சென்னைக்கு அழைத்தார்; தாம் இயற்றிய கச்சிக் கலம்பகத்தைச் சென்னையில் ஐயரைக் கொண்டே அரங்கேற்றுவித்தார். பூண்டி அரங்கநாத முதலியாருடன் நேரிற் பழகிய ஐயரவர்களும், முதலியாரின் நட்பை விரும்பிச் சென்னை மாகாணக்கல்லூரியில் பதவிபெறுவதை விரும்பினார்.

ஆனால் ஐயருடைய தந்தையார் இதற்கிணங்கவில்லை. அவர் சமயப்பற்று மிக்கவர்; சைவநெறி வழுவாதவர். சைவத் தலமாகிய கும்பகோணத்திலேயே வாழ்ந்திருத்தல் வேண்டுமென்று அவர் விரும்பினார். தந்தையின் விருப்பத்தை மீறி நடத்தற்கு விரும்பாத ஐயர், சென்னை போகும் விருப்பத்தை ஒழித்துவிட்டுக் கும்பகோணத்திலேயே இருந்துவிட்டார்.

## நூல்கள் வெளியீடு

ஐயர் பிறகு, பத்துப்பாட்டு என்னும் நூலைப் பற்றிய ஆராய்ச்சியில் இறங்கினார்; அந்நூலை நச்சினார்க்கினியர் உரையுடன் 1888-இல் புத்தக வடிவில் வெளிக்கொணர்ந்தார்; தமிழகம் அதுவரை புத்தக வடிவில் காணாதிருந்த நூல்கள் பலவற்றைத் தேடிக் கண்டுபிடித்து வெளியிடும் இடர் மிகுந்த வேலையைத் தம்விருப்பப் பணியாக மேற்கொண்டார்; ஐம்பெருங் காப்பியங்களைப் புத்தக வடிவில்பார்த்துவிடவேண்டு

மென்னும் பேரவாக் கொண்டார். அதற்கேற்பத் தமிழ் நாட்டில் பலரிடமிருந்து அரிய தமிழ் நூல் களை யெல்லாம் வெளிப்படுத்துமாறு வேண்டுகோட் கடிதங்கள் வந்தவண்ணமாயிருந்தன.

இவை ஐயரவர்கட்கு மேன்மேலும் ஊக்கத்தை யும் உற்சாகத்தையும் அளித்தன. அவர், வழக்கம் போல, மீண்டும் பல ஊர்களுக்குச் சென்று, சிலப் பதிகார ஏட்டுப்பிரதிகள் பலவற்றைப் பெற்றார்; அவற்றை ஒப்பு நோக்கி, ஒழுங்குபடுத்தி, 1892-இல் நூல் வடிவில் வெளியிட்டார்; சிலப்பதிகாரம் வெளி யான பிறகு, மீண்டும் ஏட்டுப் பிரதிகளைக் கண்டு பிடித்து, இரண்டாண்டுகளில் புறநானூறு நூல் வடி வில் வெளிவருமாறு செய்தார்.

**ஆதரவாளர் மறைவு**

இங்ஙனம் இடையறா முயற்சி செய்து சலியா உழைப்பின்மீது, சங்கத்தமிழ் நூல்களை ஒன்றன் பின் ஒன்றாகத் திருத்தமுற, நல்ல முறையில் குறிப் புக்கள் அளித்து, அச்சிற் பதிப்பித்துக்கொண்டு வருகையில், ஐயரின் நெருங்கிய நண்பர்களான சேலம்--இராமசாமி முதலியார், பூண்டி—அரங்கநாத முதலியார், தியாகராச செட்டியார், ஐயரின் தந்தை யார் முதலியோர் ஒருவர்பின் ஒருவராக இவ்வுலக வாழ்வை நீத்தனர்.

**மணிமேகலை வெளியீடு**

புறநானூறு வெளிவந்த நான்காண்டுகள் கழிந்து, 1898-இல் **மணிமேகலை** ஒரு நூலாக

வெளிப்பட்டது. ஐம்பெருங் காப்பியங்களையும் நூல் வடிவில் கொண்டுவர வேண்டுமென்று ஐயரவர்கள் மிகப்பெரு முயற்சி எடுத்தும், சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய மூன்றை மட்டும் வெளிப்படுத்த முடிந்ததே ஒழிய, வளையாபதி, குண்டலகேசி ஆகிய இரண்டு நூல்களும் கிடைக்கவேயில்லை.

## சென்னைக்கு மாற்றம்

ஐயரவர்களின் தந்தையார் 1900-இல் காலமானார். அதன் பிறகு இரண்டாண்டுகள் வரை ஐயர் கும்பகோணத்திலேயே இருந்தார். கும்பகோணம் கல்லூரியில் ஐயர் திறமை மிக்க தமிழாசிரியர் என்று புகழ்பெற்றார். மாணவர் மனநிலைக்கேற்பத் தமிழ் கற்பிப்பதில் வல்லவர் என்னும் புகழ் பரவியதனால், அரசாங்கம், ஐயரைச் சென்னை மாகாணக் கல்லூரிக்கு மாற்றியது. கும்பகோணம் கல்லூரியில் 23 ஆண்டுகள் பணியாற்றிய பிறகு, 1903-ஆம் ஆண்டு இறுதியில் ஐயர் சென்னை வந்து சேர்ந்தார்.

## மாகாணக் கல்லூரிப் பேராசிரியர்

ஐயர் சென்னை மாகாணக் கல்லூரியிலும் மாணவர் விரும்பிப் போற்றும் ஆசிரியரானார். அந்தக் காலத்தில் ஆங்கிலப் பள்ளிக்கூடங்களில் தமிழும் தமிழாசிரியரும் மதிக்கப்படுவதில்லை. ஆனால் அத்தகைய காலத்திலே, ஐயர் மாணவர் அனைவரும் தம்மிடம் அன்பு கொள்ளுமாறு செய்துவிட்டார்; தமிழ்ப்பாடம் என்றால் விரும்பிப் பாடம் கேட்குமாறு செய்துவிட்டார். மாணவர்கள் பாடம் கேட்பதில்

கவனக்குறைவாக இருந்தாலும், குறும்புகள் செய்து கொண்டிருந்தாலும் நயமாகத் திருத்தியும் சிலேடை மொழிந்தும் அவர்களைத் திருத்திவிடுவார். ஐயர் ஆழ்ந்த கல்வியுடையவர் என்பதை அறிந்துகொண்ட மாணவர்கள் அவர்பால் மிகுந்த மரியாதையுடனும் அன்புடனும் நடந்துகொள்ளத் தலைப்பட்டனர்.

கட்டுரைகளை ஒழுங்காக எழுதாத மாணவர்களை ஐயர் கண்டிப்பது வேடிக்கையாக இருக்கும். ஒரு முறை நிறையப் பிழைகளுடன் கட்டுரை எழுதியிருந்த ஒரு மாணவனைப் பார்த்து, "கல்லூரிக்குச் செலவிடும் பணத்தைக் கழனியில் போட்டாலும் பலன் கிடைத்திருக்குமே!" என்று ஐயர் கூறினர்; மற்றொரு முறை, "தமிழைப் படிப்பதைவிட வடமொழியைப் பயின்றிருக்கலாமே!" என்று ஒரு மாணவனிடம் கூறினர். இவ்வாறு அவர்கள் மனத்தில் பதியும் வண்ணமும், சுடுசொற்கள் இல்லா வண்ணமும் கண்டிப்பதில் ஐயர் திறமை மிகுந்தவர்.

## பலவகைத் தமிழ்த் தொண்டு

இவ்வண்ணம் பதினாறு ஆண்டுகள் சென்னை மாகாணக் கல்லூரியில் ஐயரவர்கள் பேராசிரியராயிருந்து, பின்னர் விலகினர். இதனிடையே சென்னை, அண்ணாமலை, மைசூர், காசி, திருவனந்தபுரம், ஆந்திரப் பல்கலைக் கழகங்களில் உள்ள **தமிழ்க் குழுக்களில்** உறுப்பினராக அமர்ந்து, தமிழ்த் தொண்டு பல புரிந்தனர். சென்னைப் பல்கலைக்

கழக வித்துவான் தேர்வுக்குழுவின் தலைவராகப் பல ஆண்டுகள் இருந்து, அருந்தொண்டு செய்தனர்.

**புதிய நூல்கள் வெளிவரல்**

ஐயரவர்கள் சென்னை வந்த பிறகும், ஏட்டுச் சுவடிகளைத் தேடிப்பிடிப்பதையோ, பழைய சுவடிகளைப் புதிய நூல்களாக வெளியிடுவதையோ கைவிடவில்லை. அவர் எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றாகிய **ஐங்குறுநூறு** என்னும் நூலை 1903-ஆம் ஆண்டில் வெளிப்படுத்தினர். அதற்கு மறு ஆண்டே '**பதிற்றுப்பத்து**' என்னும் பழைய நூல் வெளிவந்தது. அதன் பிறகு, ஐயர் பதினான்கு ஆண்டுகள் கழித்து (1918-இல்) **பரிபாடலை** வெளியாக்கினர்.

**பாராட்டுகள்**

குன்றா முயற்சியும் தளரா ஊக்கமும் கொண்ட ஐயரை அரசாங்கம் பலவகைகளிற் சிறப்பித்தது. 1906-ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் முதல் நாள் அவருக்குப் 'பெரும் பேராசிரியர்' என்னும் பொருளையுடைய **மஹா மஹோபாத்யாய** என்னும் பட்டத்தை வழங்கியது; அதற்கு முன் ஆண்டில் **ஆயிரம் ரூபாய்** சன்மானம் அளித்தது. அவருக்குப் பேராசிரியர் பட்டம் கிடைத்ததுபற்றிக் கும்பகோணம் கல்லூரி பாராட்டுக் கூட்டம் நடத்தியது. அப்போது அக்கல்லூரியில் தமிழாசிரியராயிருந்த வை. மு. சடகோப ராமாநுஜாச்சாரியார் ஐயரை மிகப் பாராட்டிப் பேசினர். தேசியகவி சி. சுப்பிரமணிய பாரதியார் வாழ்த்துப்பாக்கள் அனுப்பினர். கவி ரவீந்திர நாத தாகூர் சென்னை வந்திருந்த

சமயத்தில் ஐயரை வீட்டில் வந்து கண்டு பாராட்டிச் சென்றார். பாரத தர்ம மகா மண்டலத்தார், ஐயரது தமிழ்த் தொண்டினை அறிந்து, 1917-ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் '**திராவிட வித்யாபூஷணம்**' என்னும் பட்டத்தை வழங்கிப் பெருமைப்படுத்தினர்.

## ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி

ஐயரவர்கள் 1919-ஆம் ஆண்டுத் துவக்கத்தில் தம் பதவியிலிருந்து விலகினர். ஆனால் ஐந்தாண்டுகளுக்குள் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் விருப்பப்படி, அண்ணாமலை தமிழ்ப்பிரிவுத் தலைவர் பதவி ஏற்று 1924-இல் அண்ணாமலை நகரம் சென்று, மூன்றாண்டுகள்வரை அப்பதவியில் இருந்தார்.

## புதிய பட்டங்கள்

காஞ்சி காமகோடி பீட **சங்கராசாரி சுவாமிகள்** 1925-ஆம் ஆண்டில், '**தாக்ஷிணாத்ய கலாநிதி**' என்னும் பட்டத்தை ஐயருக்கு வழங்கினர். அதே ஆண்டு ஜூன் திங்களில் மதுரைத் தமிழ்ச் சங்க ஆண்டுவிழாவில் 5000 ரூபாய்கள் கொண்ட பணமுடிப்பு ஒன்று ஐயருக்கு வழங்கப்பட்டது. சென்னைப் பல்கலைக் கழகம் 1932-ஆம் ஆண்டு ஆகஸ்ட் திங்களில் ஐயருக்கு "இலக்கியப் பேரறிஞர்" என்னும் பொருள் கொண்ட **டாக்டர்** என்னும் பட்டத்தை அளித்துச் சிறப்பித்தது.

## 80-ஆம் ஆண்டு நிறைவு விழா

1935-ஆம் ஆண்டில் ஐயருக்கு 80 வயது நிறைவானது. அந்த 80-ஆம் ஆண்டுவிழா சிறப்பாகக்

கொண்டாடப்பட்டது. சென்னைப் பல்கலைக் கழகம் அவர் தொண்டினைப் பாராட்டி ஒரு தேநீர் விருந்தளித்தது. அவ்விழாவில் திருப்பனந்தாள் காசிமடத்துத் தலைவர் அளித்த ஐயரவர்களின் **திருவுருவப்படம்** செனேட் மண்டபத்தில் திறந்துவைக்கப்பட்டது. ஐயரவர்களுடைய தமிழ்த் தொண்டினைப் பாராட்டி 3000 ரூபாய்கள் கொண்ட **பணமுடிப்பு** ஒன்று ஐயரிடம் அளிக்கப்பட்டது.

### புதிய நூல் வெளியீடு

அவ் விழாவிற்குப் பிறகும் ஐயர் ஓய்வு பெறவில்லை. மீண்டும் ஏட்டுச் சுவடி ஆராய்ச்சியில் இறங்கிக் **குறுந்தொகை** எனும் அரிய நூலை 1937-இல் அச்சிற் பதிப்பித்தார். எண்பது வயதாகியும் இவ்வாறு ஓயாமல் உழைத்துக்கொண்டிருந்த அவருடைய மனவலிமையைப் பாராட்டிச் சென்னைப் பல்கலைக்கழகம் அவருக்கு 1500 ரூபாய்கள் கொடுத்துதவியது.

### ஐயரது மறைவு

1942-இல் சென்னைநகர்மீது ஜப்பானியர் குண்டு வீசுவர் என்ற அச்சம் ஏற்பட்டு, நகரைத் துறந்து வெளியிடம் செல்லுமாறு அரசாங்கம் மக்களுக்கு அறிவித்தது. அவ்வமயம் ஐயர் திருக்கழுக்குன்றம் சென்று, அங்குள்ள திருவாவடுதுறை மடத்தில் இருந்தார்; சென்னையில் இருந்தபோதே தவறி விழுந்து கால் எலும்பு முறிந்து படுத்த படுக்கையினரானர். அவர் ஒரு நாள் அங்குத் திடீரெனத் தம்

எண்பத்தெட்டாம் வயதில் காலமானர். அவரது பிரிவைப் பொருமல் தமிழ் நாடு முழுவதும் வருந்தியது. அவரது பிரிவு தமிழ் நாட்டிற்கு ஈடு செய்ய முடியாத பெருநஷ்டமாகும்.

ஐயரவர்கள் காலஞ் சென்ற பிறகு, அவர் அரும் பாடுபட்டுத் திரட்டிவைத்திருந்த ஓலைச் சுவடிகள் அனைத்தும் அடையாறு பிரம ஞான சபையில் சேர்க்கப்பட்டன. அங்கு இவற்றைத் தனிப்பிரிவாக வைத்து, அதற்கென ஒரு புலவரை நியமித்து, வெளிவராத நூல்களை ஆராய்ந்து வெளியிடுதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. இம் முயற்சியின் பலனுகச் சில நூல்கள் வெளிவந்துள்ளன. இம் முயற்சியை மேற்கொண்டு தம் பொருளில் நடத்தி வருபவர் **ஸ்ரீமதி ருக்மணி அருண்டேல்** அவர்கள். அவர்களுக்கு நமது நன்றி உரியதாகுக.

## 4. நற்குணங்கள்

### பலவகைத் தொண்டுகள்

டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் முன் சொன்ன தமிழ்ப் பணிகளுடன் பொதுத் தொண்டிலும் ஈடுபட்டுழைத்தார். திருவல்லிக்கேணி நகரக் கூட்டுறவு இயக்கத்தைத் (T. U. C. S.) துவக்கியவர்களுள் இவரும் ஒருவர்.

மதுரைத் தமிழ்ச் சங்கம் துவக்கப்பட்ட நாள் முதல் அதிற் பங்கு கொண்டு, அதன் நிரந்தர உறுப்பினரானார். மேலைச் சிவபுரி சன்மார்க்க சபையினரின் ஆண்டு விழாக் கூட்டங்களில் மும்முறை ஐயர் தலைமை தாங்கிப் பணியாற்றி மகிழ்ந்தார்; சென்னைப் பல்கலைக் கழகத்தார் விருப்பத்திற்கு இணங்கி, "சங்கத் தமிழும், பிற்காலத் தமிழும்" என்பது பற்றிச் சொற்பொழிவு செய்தார்; பின்னர் ஒரு முறை, "பண்டைத் தமிழ் இசையும் இசைக் கருவிகளும்" என்பது குறித்துப் பேசினார்; சென்னையில் திருவள்ளுவர் திருநாள் கொண்டாட்டத்தில் தலைமை வகித்துப் பேசினார். இச்சொற்பொழிவுகள் அனைத்தும் நூல் வடிவில் வெளிவந்துள்ளன. ஐயர் திங்கள், வார இதழ்களில் அரிய பல கட்டுரைகளை வெளியிட்டுவந்தார்; தம் சுயசரிதத்தை எழுதினார்; ஆனால் அது முடியு முன்னரே காலமானார். அந்நூல் பிறகு அவர் குமாரரால் முழுவதும் அச்சிடப்பட்டது.

## காலத்தின் திறமை

ஐயரவர்கள் இன்னின்ன நேரத்தில் இன்னின்ன வேலைகளைச் செய்தல் வேண்டும் என்னும் வரையறை ஏற்படுத்திக்கொண்டு அதன்படி நடந்துவந்தார். வைகறையில் அவர் துயில் எழுவார்; காலைக் கடன்களை முடிப்பார்; சிறிது நேரம் இறை வணக்கத்தில் அமர்ந்திருப்பார்; பிறகு காப்பி அருந்தி விட்டுத் தேவார திருவாசகங்களைப்படித்துக்கொண்டிருப்பார் அவர் பிறகு அச்சகத்திலிருந்து வரும் அச்சுப்பிரதிகளைப் பார்த்துப் பிழையறத் திருத்தியனுப்புவார்; புதிதாக அச்சிடவேண்டும் நூல்களை ஆராய்ந்து ஒழுங்கு செய்வார்; பத்து மணிக்குக் குளித்து தம் துணிகளைத் தாமே துவைப்பார்; பிறகு பூசை முடித்து உணவு உண்பார்; பின்னர் ஓய்வாக அமர்ந்து திருக்குறள், நாலடியார் முதலியவற்றைப் படிக்கச் செய்து அவற்றினை ஆராய்வார்; சிறிது அயர்ந்து உறங்கிய பின், பகல் ஒரு மணிக்குக் காப்பி அருந்துவார். பின்னர் அவர் நூலாராய்ச்சி, அதன் பிறகு மாணவர்க்குப் பாடஞ்சொல்லுதல், மாலையில் சரித்திரக் குறிப்புகள் எழுதுதல் போன்றவற்றைக் கவனிப்பார்; இடையிடையே தம்மைத் தேடிக்கொண்டு வருபவர்களை வரவேற்று, அளவளாவிப் பேசி மகிழ்வூட்டி அனுப்பிவைப்பார்; இரவு ஏழு மணி முதல் எட்டரை மணிவரை மாணவர்க்குப் பாடஞ்சொல்லுவார்; இரவு ஒன்பது மணியானதும் உணவு உண்டு, தாயுமானவர் பாடல் போன்ற பக்திப் பாடலைப் பாடிக் கொண்டே படுக்கைக்குப் போவார். இவ்வாறே ஒவ்

வொரு நாளிலும் ஒரு நிமிட நேரத்தையும் வீணுக்காமல் ஐயர் தொண்டாற்றிவந்தார்.

### அடக்கம் உடையவர்

ஐயர் மிகச் சிறு வயதிலிருந்தே நற்குண நல்லொழுக்கங்களைக் கடைப்பிடித்துவந்தார். எவரிடத்தும் கடுகடுத்துப் பேசும் வழக்கம் அவரிடம் இல்லை. 'அடக்கம் அமரருள் உய்க்கும்' என்பதைத் தம் வாழ்வில் மெய்ப்பித்துக் காட்டியவர் ஐயர் எனலாம். தம் அடக்கத்தாலும் பணிவாலும் ஐயர் தம் ஆசிரியராகிய பிள்ளையவர்கள் உள்ளத்தைக் கவர்ந்தது மட்டுமின்றித் திருவாவடுதுறை மடத்துத் தலைவராயிருந்த மேலகரம் சுப்பிரமணிய தேசிகருடைய அன்பையும் ஆதரவையும் பெற்றிருந்தார்.

### குடும்பப் பொறுப்பு

சென்னை மாகாணக் கல்லூரியில் பதவி ஏற்க வருமாறு பூண்டி அரங்கநாத முதலியார் அழைத்த காலத்தில் தம் தந்தையார் விரும்பவில்லை என்பதற்காக ஐயர் சென்னை செல்ல மறுத்துவிட்டார். தம் தந்தையிடம் ஐயருக்கிருந்த அன்பும் பற்றும் அளவிட்டு உரைக்கக் கூடியன அல்ல. ஐயர் பெற்றோரிடம் பேரன்பு பூண்டவர்; தம் தந்தையார் குடும்பப் பொறுப்பை ஏற்றுப் பெரிதும்சங்கடப்பட்டுக்கொண்டிருக்கிறார் என்பதறிந்த ஐயர், தாம் பிள்ளையவர்களிடம் படித்துக்கொண்டிருக்கும்போதே, தம் ஆசிரியருடன் போகுமிடங்களில் தமக்குக் கிடைக்கும் பரிசில்களைத் தந்தையாருக்கு அனுப்பிவந்தார்; இடையிடையே உத்தமதானபுரம் சென்று, புராணப் பிரசங்கங்கள் செய்து, அவற்றின் மூலம் கிடைக்கும் வரு

வாயினைத் தம் தந்தையாரிடம் அளித்துவந்தார்; இறுதியாகக் கும்பகோணம் கல்லூரியில் வேலை கிடைத்தவுடன், தம் குடும்பத்தையே கும்பகோணத்திற்கு அழைத்துவந்து வைத்துக்கொண்டார்.

## தமிழ்ப் பற்று

தமிழை அனைவரும் படிக்கவேண்டும் என்று தூண்டுவதில் ஐயரவர்கள் முன்னணியில் இருந்தார். தமிழ் மணம் எங்கும் வீசவேண்டும் என்பது அவரது பேரவா.

ஐயரவர்கள் தமிழ் கற்பிக்கும்போது ஒரு சிறு செய்தியையும் விடாமல் கூறுவார்; இலக்கியங்களை எடுத்துக்கொண்டால், பாட்டை இசையுடன் படிக்கச் சொல்லுவார்; தக்க இசையுடன் படித்துக் காட்டுவார்; செய்யுளை மாணவர்கள் அறியும் வகையில் சீர்பிரித்துக்காட்டி, இலக்கணக் குறிப்பு, பொருள் முதலியவற்றை விளக்குவார்; சொல்நயம், பொருள் நயம் முதலியவற்றை நயமாக விளக்கியுரைப்பார்.

தமிழர்கள் எண்ணுவதும் பேசுவதும் எழுதுவதும் தமிழாகவே இருக்கவேண்டுமென்பது ஐயரது கருத்து; பிற மொழிகளிலுள்ள நல்லறிஞர் நூல்கள் தமிழில் வெளிவரச் செய்ய வேண்டும் என்பதும் ஐயரது அவா.

ஐயரவர்களிடம் பிறர் குற்றத்தை மறத்தல், புறங் கூறாமை, நன்றி மறவாமை, பெரியோரைப் பேணல், அன்புடைமை, அடக்கமுடைமை, பிறர் துயர் துடைத்தல், ஊக்கமுடைமை முதலிய நற்பண்புகள் நின்றந்திருந்தன. இவற்றால் ஐயரவர்

களிடம் நாட்டின் பெரும்புலவர்கள் நன்மதிப்பும் அன்பும் கொண்டிருந்தனர்; ஐயரது இடையறு நூலாராய்ச்சித் தொண்டிற்குத் தத்தம்மால் இயன்ற உதவி செய்தனர். மற்றைப் புலவர்கள் ஐயரவர்களின் தமிழ்ப் பெருந்தொண்டு கண்டு, அவரிடம் நீங்கா அன்பு கொண்டனர்; தமிழ் மக்கள் அவரைத் '**தமிழ்த் தாத்தா**' என்னும் அன்புப் பெயரால் அழைக்கத் தொடங்கினர்.

## தமிழுக்காக வாழ்ந்தார்

ஐயரவர்கள் தமிழ் வாழ்வு வாழ்ந்தார்; எண்பத்தெட்டு ஆண்டுகளில் குழந்தைப்பருவம் நீங்கலாக மற்றைக்காலம் முழுவதும் தமிழையே படித்து, தமிழுக்காகவே உழைத்து, தமிழாலேயே வாழ்ந்து, தமிழைக் கொண்டே பெரும் புகழ் எய்தினர். சென்னை அறிஞர்கள் ஐயரவர்களின் **உருவச்சிலை** ஒன்றைச் சென்னை மாகாணக் கல்லூரியின் முகப்பில் வைத்துச் சிறப்பித்துள்ளனர். அவருடைய திருவுருவப் படங்கள் சென்னைப் பல்கலைக்கழகச் செனேட் மண்டபத்திலும் கும்பகோணம் கல்லூரி மண்டபத்திலும் காட்சி அளிக்கின்றன. தமிழ்ப் படித்தவர் ஐயர் பதிப்பித்த நூல்களைப் படியாமல் இருத்தல் இயலாது. எனவே, தமிழ் படித்தவர் ஐயரை மறக்கவே முடியாது. 'தமிழ்' இலக்கியம் உள்ள அளவும் ஐயரது பெயரும் புகழும் தமிழ் நாட்டில் இருக்கும் என்பது உறுதி.

**வாழ்க ஐயரது தமிழ்த் தொண்டு !**

## II. சதாவதானி—செய்குதம்பிப் பாவலர்
(கி. பி. 1855—1950)

### 1. இளமையும் கல்வியும்

**நாஞ்சில் நாட்டுத் தமிழர்**

நாஞ்சில் நாடு சங்க காலத்திலிருந்தே தமிழ் வளம் குன்றாத நாடாக இருந்துவருகிறது. நாஞ்சில் நாடு சில நூற்றாண்டுகளாகச் சேரநாட்டுடன் இணைந்திருப்பினும், நாஞ்சில் நாட்டுத் தமிழர் தம் தாய்மொழியைத் தம் உயிரினும் உயர்வாய்ப் போற்றுகின்றனர். அத்தமிழருள் பலமை மிக்கார் பலர் இருந்தனர்; இன்றும் இருந்துவருகின்றனர். முன்னர் இருந்து மறைந்த பெரும்புலவருள் சிறந்தவரே **பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்கள்.** இந்த நூற்றாண்டுப் புலவருள் சிறந்தவர் மூவர். அவருள் ஒருவர் **இசைச் செல்வர் இலக்குமணப் பிள்ளை**; மற்றொருவர் **கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை**; பிறிதொருவர் **சதாவதானி—செய்குதம்பிப் பாவலர்.**

**முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள்**

நம் தமிழ் நாட்டு முஸ்லிம்கள் யார்? அவர்கள் தமிழரே; இஸ்லாத்தைத் தழுவியவர். அவர்கள் பிறந்தது முதல் இறக்கும் வரை தமிழையே தாய்மொழியாகக்கொண்டவர். ஆதலின் அவர்கள் தங்கள்

தாய் மொழியாகிய தமிழின் வளர்ச்சியில் கருத்துக் கொண்டவரே யாவர். தமிழ் நூல்கள் நெடுங்கால மாக இந்து சமயத் தொடர்புடையனவாக இருந்து வந்தமையால், முஸ்லிம்கள் அந்த நூல்களை மிகுதி யாய்க் கற்க வாய்ப்பில்லை. அங்ஙனம் இருந்தும் முஸ்லிம்கள் சிலர் எல்லாத் தமிழ் நூல்களையும் கற்றுப் பெறும் புலவராய்த் திகழ்ந்தனர். அவருள் தலைசிறந்தவர் எட்டயபுரத்தரசரது அவைப்புலவரா யிருந்த **உமறுப் புலவர்** என்பவர். அவர் நபி நாயகம் அவர்களின் வரலாற்றைக் காவியமாகப் பாடி அழியாப் புகழ் பெற்றவர். அவருக்குப்பின் திருச்சிராப்பள்ளியில் **பிச்சை-இபுராஹீம் புலவர்** என் பவர் சிறந்திருந்தார். அவர் திருச்சிராப்பள்ளி பிஷப் ஹீபர் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராய் வேலைபார்த்தவர் ; 'கம்பராமாயணச் சொற்பொழிவு களில் இணையற்றவர்' எனப் பெயர் பெற்றவர். மதுரை மாவட்டத்து உத்தமபாளையம், போடிநாயக்க னூர் முதலிய இடங்களில் முஸ்லிம் புலவர் சிலர் இருக்கின்றனர். இந்த நூற்றாண்டு முஸ்லிம் புலவ ருள் குறிப்பிடத் தக்க பெருமையுடையவர் நமது **செய்குதம்பிப் பாவலர்** என்னல் மிகையாகாது.

**பாவலர் பெற்ளோர்**

நாஞ்சில் நாட்டின் கோநகரமாக விளங்குவது நாகர் கோவில். அதனை யடுத்துள்ளது கோட்டாறு என்னும் சிற்றூர். அதனையடுத்த **இலங்கடை** என்னும் ஊரே நமது பாவலர் பிறந்த பதியாகும். அப்பதியில் வாழ்ந்த **பக்கீர் மீரான் சாகிப்** என்ப

வருகக்கு ஐந்தாம் மகனாராய்ப் பிறந்தவர் நமது பாவலர். அவர் தாயார் சமய ஒழுக்கத்தில் பெயர் பெற்ற குடும்பத்தைச் சேர்ந்தவர். தந்தையாரும் தாயாரும் குணச்சிறப்புப் பெற்றவரே அன்றிப் பணச் சிறப்புப் பெற்றவரல்லர்.

## பள்ளிக்கல்வி

பாவலர் 'விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்னும் மூதுரையை மெய்ப்பிப்பார்போல இளமைப் பருவத்திலேயே தம் நுண்ணறிவைக் காட்டலானார்; தமக்குத் தோன்றிய பல ஐயங்களையும் விளங்காதவற்றையும் தம் பெற்றோரிடம் கூறி விளக்கம் பெற்றார்; தாயாரிடம் சமயத் தொடர்பான பல செய்திகளைக் கேட்டுணர்ந்தார். சுருங்கக் கூறின், அவர் பள்ளியில் சேர்க்கப்படுமுன்னரே, 'இவன் கல்வியில் கருத்துடையவன்' என்னும் எண்ணத்தைத் தம் பெற்றோர்க்கு உணர்த்திவிட்டார் என்னலாம்.

அவர் ஐந்து வயதில் தம் சமூக வழக்கப்படி குர்-ஆன் கற்க அனுப்பப்பட்டார். அவர் மூன்றாண்டுகள் சமயக் கல்வியைக் கற்ற பிறகு எட்டாம் ஆண்டில் தொடக்கப் பள்ளியில் சேர்ந்தார். எட்டு வயதுடைய அவர் அரை வகுப்பில் சேர்க்கப்பட்டார்; ஆயின் அவரது அறிவு நுட்பத்தைக் கண்ட தலைமையாசிரியர் இருபது நாட்களில் அவரை முதல் வகுப்புக்கு மாற்றினர்; ஒரு திங்கள் கழித்து அவரை இரண்டாம் வகுப்புக்கு மாற்றினர்; பின்னர்ச் சில மாதங்களில் நான்காம் வகுப்பிற்கு மாற்றினர்.

பாவலர் அடுத்த ஆண்டு ஐந்தாம் வகுப்பிற் சேர்ந்து படித்துத் தேர்வில் சிறந்து விளங்கினர்.

## வறுமையும் வாட்டமும்

மேற்கல்வி கற்க ஆர்வம் கொண்ட பாவலரை வேறு பள்ளிக்கனுப்பிப் படிக்கவைக்கப் பெற்றோரிடம் பணவசதி யில்லை, 'மேலே படிக்க வேண்டும்' என்று பாவலர் துடித்தார்; 'பிள்ளை விரும்பியும் படிக்க வைக்கப் பணம் இல்லையே! என்று பெற்றோர் துடித்தனர். முடிவு யாது? பாவலர் தம் தந்தையாருடன் நெசவுத் தொழிலில் ஈடுபட்டார். ஆயினும், அவர் உள்ளம் கல்வி கற்பதிலேயே அவாவி நின்றது

## புலவர் சங்கரநாராயணர்

சங்கரநாராயணர் என்ற பெயருடைய ஆசிரியர் ஒருவர் இளங்கடையில் வாழ்ந்துவந்தார். அவர் அக்காலத்தில் வாழ்ந்த பெரும் புலவருள் ஒருவர். அப் பெரியார் நன்னூல் முதலிய தமிழ் இலக்கண நூல்களையும் கம்பராமாயணம் முதலிய இலக்கிய நூல்களையும் நன்கு படித்தவர். மாணவர் பலர் அவ்வாசிரியரிடம் தமிழ்க் கல்வி பயின்றுவந்தனர். சங்கரநாராயணர் பாடம் சொல்லுவதில் வல்லவர் எனப் பெயர் பெற்றவர் ஆதலின், பலாச்சுளையை மொய்க்கும் ஈக்களைப் போல மாணவர் பலர் அவரைச் சூழ்ந்திருக்கலாயினர்.

## புலவர் பெருந்தன்மை

பாவலரும் வேறு சில மாணவரும் சங்கரநாராயணரிடம் தமிழ்ப் பாடம் கேட்க விரும்பினர்.

புலவர் அவர்களது விருப்பத்திற்கு இசைந்தார்; மாணவர்கள் நன்னாளில் ஆசிரியர் திருமுன்னர்க் கூடினர்; பாடம் தொடங்குமுன் அவரவர் ஆசிரியர்க்குத் தரவேண்டிய காணிக்கையை வெற்றிலையில் வைத்து மடித்துக் கொடுத்தனர்; ஒருவர் மூன்று ரூபாய் கொடுத்தனர்; மற்றொருவர் ஐந்து ரூபாய் கொடுத்தனர்; பிறிதொருவர் ஏழு ரூபாய் கொடுத்தனர்; இப்படி அவரவர் வசதிக்குத் தக்கபடி அளித்தனர். நமது பாவலர் வறுமைவாய்ப்பட்டவராகலின், எட்டணாவை வெற்றிலையில் வைத்துக் கொடுத்தார். ஆசிரியர் அதனைமட்டும் தனியே வைத்துவிட்டுப் பாடம் தொடங்கினர்.

பாடம் முடிந்த பின்னர் ஆசிரியர் பாவலரை மட்டும் நிறுத்திக்கொண்டு மற்ற மாணவரை அனுப்பி விட்டார். அவர் தமது எட்டணாக் காணிக்கையை ஏற்காது தம்மை விரட்டிவிடுவாரோ என்று பாவலர் கண்கலங்கினர். அவ்வமயம் புலவர் பாவலர் கொடுத்த வெற்றிலையை எட்டணாவுடன் பாவலரிடம் நீட்டினர். அது கண்ட பாவலர் கண்கலங்கி நின்று, "ஆசிரியர் அவர்களே, அடியேன் ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவன். நான் பலநாள் பாடுபட்டு இந்த எட்டணாவைச் சேர்த்தேன். எனது காணிக்கை குறைவானதென்று கருதி, என்னைப் புறக்கணிக்கலாகாது", என்று கூறி வேண்டினர்.

புலவர் நகைத்து, "தம்பீ, நீ கொடுத்ததை நான் ஏற்றுக்கொண்டேன். நான் இப்பொழுது உனக்கு அதனைத் தருகின்றேன்; ஏற்றுக்கொள். நீ தவறாது

வந்து படி ; உன் அவா அடங்கும் வரை வந்து படி. இன்று இல்லாவிடினும் எதிர்காலத்தில் உன்னிடம் நான் காணிக்கை பெறுவேன். நீ கவனத்துடன் படி", என்று நன்மொழி கூறினர். மாணவர் புலவரது பெருந்தன்மையைப் பாராட்டி அவரிடம் விடைபெற்றுச் சென்றார்.

## தமிழ்ப் புலமை

புலவர் ஒருநாள் கற்பித்த பாடங்களைப் பாவலர் மறுநாள் ஒப்பிக்கலானர். ஏனைய மாணவரினும் பாவலர் சிறந்து நின்றதைக் கண்ட புலவர் மனம், பாவலர் நன்மையில் நாட்டங்கொண்டது. புலவர் பாவலரிடம் மிக்க அன்பு காட்டலானர். பாவலர் நீர் வேட்கை கொண்டவரைப் போலத் தமிழ்க்கடல் நீரைப் பருகலானர் ; நன்னூல், இலக்கணவிளக்கம், தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்களை நன்கு பயின்றார் ; நாலடியார், திருக்குறள் போன்ற அற நூல்களைப் பாடங்கேட்டார் ; கம்பராமாயணம், பெரிய புராணம், பாரதம் போன்ற பெருகாவியங் களைக் கற்றார்.

## பேச்சாற்றல்

பலர் நன்றாய்ப் படித்திருப்பார்கள் ; பேச அறியார்கள். பலர் திறம்படப் பேசுவர் ; நன்கு பயின்றிலர். சிலர் நன்றாய்ப் படித்திருப்பர் ; நன்கு பேசுவர் ; ஆயின் எழுதுவதில் சுவையற் றிருப்பர். இம்மூன்றிலும் வல்லமை பெற்றவர் மிகச் சிலரே யாவர். நமது பாவலர் இச்சிலருள் ஒருவ

ராவர். அவர் பல நூல்களை நன்றாய்ப் படித்தவர்; கடல்மடை திறந்தாற் போலப் பேசும் ஆற்றல் பெற்றவர்; திறம்பட எழுதுவதிலும் வல்லவர். அவர் தம் பதினைந்தாம் வயதிலேயே 'நன்றாய்ப் பேச வல்லவர்' எனப் பெயர் பெற்றார்.

## செய்யுள் செய்தல்

செய்யுள் செய்தலில் இரு வகையினர் உண்டு: ஒரு வகையினர் தமக்குப் பட்டன எல்லாம் பாடுவார்; அப்பாக்களில் இலக்கண அமைதி இராது. ஆயினும் அவை பாக்கள் எனப் பாராட்டுப் பெறும். வேறொரு வகையினர் இலக்கண வரம்புக்கு உட்பட்டுப் பாடுவர்; பாக்கள் சொற்செறிவும் பொருட் செறிவும் பெற்றிருக்கும். அவை மொழி வளர்ச்சிக்கேற்ற இலக்கிய வரிசையிற் சேர்க்கத் தக்கவை. இத்தகைய பாக்களைப் பாடுவதில் நமது பாவலர் வல்லவர். அவர் தமது பதினைந்தாம் வயதிலேயே **அந்தாதி, பிள்ளைத் தமிழ்** முதலிய பிரபந்தங்களும், பலவகைச் சித்திர கவிகளும் பாடினார். அவற்றுள் இன்று அச்சாகி யுள்ளவை **திருநாகூர்த் திருவந்தாதி, திருக்கோட்டாற்றுப் பதிற்றுப்பத்தந்தாதி** என்பன. நிரம்பிய இலக்கண-இலக்கியப் புலமையுடன் பாடிய கவிகள் ஆதலின் அவை, தமிழன்னையின் தமிழ்த் தோட்டத்தில் வாடா மலர்களாய்க் காட்சி அளிக்கின்றன.

# 2. சென்னையில் பாவலர்

## சென்னை வாழ்க்கை

சங்கரநாராயணப் புலவரிடம் படித்துவந்த பாவலர் தமது பத்தொன்பதாம் வயதில் தம் மரபைச் சேர்ந்த பெரியார் ஒருவர் பாடிய 'மெய்ஞ்ஞானப் பாடல் திரட்டு' என்னும் நூலை அச்சிடச் சென்னை சென்றார்; அங்கு ஓர் அச்சகத்தில் அந்நூலைத் தந்து, சில மாதங்களுக்குள் அச்சிடச் செய்து வெளிப்படுத்தினார்.

அவர் அங்குத் தங்கியிருந்த பொழுது 'ஸ்ரீ பத்மநாப விலாசம்' என்னும் அச்சகத்தின் உரிமையாளரான **இட்டா - பார்த்தசாரதி நாயுடு** என்பவரது நட்புக் கிடைத்தது. நாயுடு தமிழில் மிக்க ஈடுபாடு உடையவர்; புலவர்களுடன் பொழுது போக்குவதில் பெருமகிழ்ச்சி கொண்டவர். அவர் பாவலருடைய பெரும்புலமையை நன்கு அறிந்தார்; அவரது பேச்சு வன்மையைப் பார்த்து மகிழ்ந்தார்; நூல்களைப் பிழையின்றிப் பதிப்பிக்கும் ஆற்றலை நேரிற் கண்டார்; 'இத்தகைய ஒருவர் நமது அச்சகத்தில் இருத்தல் நல்லது' என்று கருதினார்; தம்மிடம் தங்கிவிடுமாறு பாவலரை வேண்டினார்; அவருக்குத் திங்கள்தோறும் அறுபது ரூபாய் தருவதாக வாக்களித்தார். அவர் தம்மிடம்காட்டிய அன்பினைப் பாராட்டிப் பாவலர் சென்னையில் தங்க இசைந்தார்.

## பிழையற்ற நூல்கள்

நாயுடுவின் அச்சகத்தில் அச்சான நூல்கள் பல. அவை இலக்கண நூல்கள், இதிகாச நூல்கள், புராண நூல்கள், நிகண்டுகள் எனப் பலதிறப்பட்டவை. அவற்றைப் பார்க்கப் புலவர் பலர் அச்சகத்தில் நியமனம் பெற்றிருந்தனர். அவர்கள் அனைவருக்கும் மேலாகப் பாவலர் இருந்தார். பாவலர் நினைவாற்றல் மிக்கவர்; ஆதலின் அச்சுக்குச் செல்லு முன்னரே ஒவ்வொரு நூலையும் பார்த்து பிழையறத் திருத்தி வந்தார்; நூல் அச்சாகும் பொழுது அச்சுப் பிழைகளை மிக்க கவனத்துடன் திருத்திவந்தார். செய்யுட்களைச் சீர் பிரித்து எழுதுதல், அச்சிடுதல் என்பன சிரமமானவேலை. யாப்பிலக்கணத்தைப் படித்தவரே அவற்றைச் செய்ய முடியும். பாவலர் அவற்றைத் திறம்படச் செய்து வந்தார். அவர் **நிகண்டு** முதலிய பொது நூல்களைத் **தம் பெயரால்** வெளிப் படுத்தினர்; இந்து சமயச்சார்பான நூல்களில் தம் பெயரைப் பதிப்பாசிரியராய் வெளிப்படுத்தவில்லை. அவர் நாயுடுவின் வேண்டுகோட்படி நபிநாயகத்தின் வரலாறு கூறும் **சீறாப்புராணத்**தினைப் பிழையறப் பரிசோதித்து அச்சிட்டார்; அதில் உள்ள ஐயாயிரத்துக்கு மேற்பட்ட பாடல்களுக்கு **உரை யெழுதினர்.**

## பாவலர் புகழ்

சீறாப்புராணத்திற்கு உரை வந்ததைக் கண்ட முஸ்லிம் பெருமக்கள் அந்நூலை ஆவலோடு வாங்கிப்

படித்தனர்; பாவலரது உரைச் சிறப்பினைப் படித்து மகிழ்ந்தனர்; 'இஸ்லாத்தின் சிறப்பை விளக்கவந்த இயற்றமிழ்ப் புலவர்' என்று அவரை உளமாரப் பாராட்டினர். அவர் பெயரால் வெளியிட்ட நிகண்டு முதலிய நூல்கள் செவ்விய முறையில் அச்சாகி வெளிவந்ததைத் கண்ட தமிழ்ப் புலவர் பலர் அவருக்குப் பாராட்டுக் கடிதங்கள் வரைந்தனர்; சென்னைப் புலவர் பலர் அவரை நேரிற் கண்டு தம் பாராட்டைத் தெரிவித்தனர்; அவரை அடிக்கடி சந்தித்துப் பழகவும் தொடங்கினர்; பாவலரைத் தலைமைப் பதிப்பாளராகப் பெற்ற நாயுடு அவர்களைப் பாராட்டினர். நாயுடு அடைந்த மகிழ்ச்சிக்கு அளவில்லை. அவர் பாவலர் சொற்படி நூல்களைப் பதிப்பித்து வந்தார்.

**'அருட்பா - மருட்பா பூசல்'**

பாவலர் இங்ஙனம் தமிழ்ப்பணி ஆற்றிவந்த பொழுது சென்னை மாநகரில் புலவர்க்குள் பூசல் ஒன்று தோன்றியது. இராமலிங்க அடிகள் பாடிய ஆறாயிரத்துக்கு மேற்பட்ட பாடல்கள் **அருட்பா** என்னும் பெயர் கொண்ட நூலாக வெளிவந்தன. 'அந்நூல் அருட்பா அன்று; அடிகளுடைய பாக்கள் அருட்பாக்கள் அல்ல; அவை மருட்பாக்களே ஆகும். ஆகையால் நூலுக்கு 'மருட்பா' என்று பெயரிடுதலே ஏற்புடையது' என்று ஒருசார் புலவர்கள் கொதித்தெழுந்தனர். அருட்பாக் கட்சியினர்க்கு அடிகளார் மாணவரான **தொழுவூர் வேலாயுத முதலியார்** தலைவராக விளங்கினர். மருட்பாக் கட்சியினர்க்கு

